REG. NO. M. 2997.

தனிப்பிரதி அணா 1

**RÉPUBLIQUE FRANÇAISE**

LIBERTÉ.—ÉGALITÉ.—FRATERNITÉ.

ஆசிரியர் :
யாழ்ப்பாணம்
தென்கோவை.
ச. கந்தைய பிள்ளை
தமிழ்ப் பண்டிதர்,
சிலோன்.




LE RÉDACTEUR
TENKOVAI
S. CANDIAH PILLAI.
Tamil Pandit
Jaffna
CEYLON.

# VITTAGAM

JOURNAL HEBDOMADAIRE PARAISSANT LE JEUDI

# வித்தகம்

வியாழக்கிழமை தோறும் வெளிவருவது

Bureau de la Direction :—
RUE D'AMBALATADOU AYER
MADAM, NO. 2,
Pondichery.

நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது.

குறள்.

காரியாலயம் :—
அம்பலத்தாடு ஐயர் மடத்து வீதி,
நெம்பர் 2,
புதுவை.

VOL. II. புதுவை, யுவ ஹு சித்திரை மீ ௧௯ உ (2—5—35) NO. 23.

## திருவாய் மொழி.

மாயனென்னெஞ்சினுள்ளான் மற்றும்யவர்க்குமதுவே
காயமும்சீவனும்தானே காலுமெரியுமவனே
சேயனணியன்யவர்க்கும் சிந்தைக்கும்கோசரமல்லன்
தூயன்துயக்கன்மயக்க னென்னுடைத்தோளிணையானே.

நாவினுள்நின்றுமலரும் ஞானக்கலைகளுக்கெல்லாம்
ஆவியுமாக்கையும்தானே அழிப்போடளிப்பவன்தானே
பூவியல்நால்தடந்தோளன் பொருபடையாழிசங்கேந்தும்
காவிநன்மேனிக்கமலக் கண்ணனென்கண்ணினுளானே.

கமலக்கண்ணனென்கண்ணினுள்ளான் காண்பனவன்கண்களாலே
அமலங்களாகவிழிக்கும் ஐம்புலனுமவன்மூர்த்தி
கமலத்தயன்நம்பிதன்னைக் கண்ணுதலானொடும்தோற்றி
அமலத்தெய்வத்தோ டுலகமாக்கியென்நெற்றியுளானே.

உ

திருவருள் துணை.




காலமுண் டாகவே காதல்சேய்
துய்மின் கருதரிய
ஞாலமுண் டானோடு நான்முகன்
வானவர் நண்ணரிய
ஆலமுண் டானெங்கள் பாண்டிப்
பிரான்றன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின்
றான்வந்து முந்துமினே.

[திருவாசகம்]

# வித்தகம்

புதுவை
யுவ ஹூ சித்திரை மீ 19 உ

## உடையது விளம்பேல்.

ஒளவையார் அருளிய ஆத்திசூடி என்னும் சூத்திரக்கொத்துள் ஒன்றாகிய இவ் அமுதவாக்கியம் லௌகிகத்திற்கும் பாரமார்த்திகத்திற்கும் ஒப்பியதாகின்றது. இதன் பொருள் இருவகை நிலைக்கும் ஒப்பியவாறு ஒரு சிறிது கூறப்படும்.

உன்னிடம் உள்ளதைப் பிறர் அறியும்படி சொல்லாதே என உலகியலுக்கு ஒப்பிய பொருள் கூறப்படுகின்றது. தன்னிடம் உள்ளதை — தனது நிலைமையை—ஏழைமையை — தெய்வ உபாசனை — மந்திரம் — தந்திரம் முதலியவற்றை அநாவசியகமாகப் பிறர்க்குக் கூறுதல் தீதாகும் என்பர்.

### கொன்றைவேந்தன்.

"தோழனோடும் ஏழைமைபேசேல்"

என எமது பாட்டியார் அருளியதும் அறிக. உலகியலில் மாந்திரிகர், வைத்தியர், வியாபாரிகள் முதலாயினோர் தமது தொழிலுக்குரிய இரகசியங்களைப் பிறர்க்குக் கூறமாட்டார். மனச்சோர்வினாற்றான் பிறவாறு தான் உடையது விளப்புதலால் மனச் சங்கடம் காரிய சித்தியின்மை முதலாக உளவாகும் ஏதப்பாடு பலவாகும். ஒருவன் உடையது விளம்புதலால் பிறர் அவனை வஞ்சித்தற்கும் தீமை புரிதற்கும் ஏதுவாகும். தனவந்தர் ஒருவருடன் வழிப் பிரயாணம் செய்த மூடனொருவன் அவ்வழியே சென்ற திருடர்களுக்குத் தன் இடுப்பில் ஐந்து பணம் முடிந்து வைத்திருப்பதாகக் கூறிய போது அதனைப் பறி முதலாக்கிய அத் திருடர் பின்னும், அம்மூடன் மூலமாகவே, மறைவிடத்து ஒதுங்கிய அத்தனவந்தர் பணத்தையும் பறிமுதலாக்கிச் சென்றதாக ஒரு உபகதை கூறப்படுகின்றது. இது போலவே தங்கள் நிலைமையையும் ஆற்றலையும் அறியாமையால் பிறர்க்குக் கூறிக் கேடடைந்தார் பலர். தெய்வீக ரகஸியங்களையும் அவற்றிற்குரிய அநுட்டானங்களையும் பிறர்க்குக் கூறுதல்தகாது. நம்பிக்கை இல்லாதவர்க்கு —பக்குவம் இல்லாதவர்க்குத் தெய்வீக ரகஸியங்களைக் கூறுதலால் வரும் ஏதப்பாடு பலவாகும். அறிவுடையோர் தாம் தொடங்கும் கருமங்களையும் செய்யும் தொழில்களையும் அவற்றின் பயனையும் அத்தகைய பயனால் மாத்திரம் பிறர் அறியும் படி செய்வாரேயன்றி அவற்றைப் பிறர் அறியும்படி முன்னாக வெளிப்படுத்தமாட்டார்.

### குறள்.

கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை [இடைக்கொட்கின்
எற்றா விழுமந் தரும்.

(ஷை 67-ம் அதி. வினைத்திட்பம் செ. 3.)

என்றார் நமது பொய்யில் புலவரும்.

ஒருவன் செய்யும் கருமத்தை இறுதியில் அதன் பேற்றினால் புலப்படச் செய்வதே ஆண்மையாகும். அன்றி ஆரம்பத்திலும் இடையிலும் புலப்படும்படி செய்வானாயின் அம்முயற்சி அவனுக்குத் தீராத் துன்பத்தை விளைக்கும் என்பது இதன் பொருளாகும். இடை எனவே முதலும் கூறப்பட்டது. உடையது விளம்பாமையாகிய செறிவுடைமையே — பொறையுடைமையே நிறை உடைமையும் ஆம்.

"நிறைஎனப்படுவதுமறை பிறர் அறி [யாமை"

என்பது ஆன்றோர் வாக்கு. (தொல்காப்பியம்—பொருளியல் — பொருள் 15) நிறையுடையவரே மதிவைராக்கியமாகிய வினைத் திட்பம் உடையவரும் ஆவர். நிறை இல்லாதவரே—நிறையை அறியாதவரே அசுத்த நிறையின் ஆதிக்கம் அமையப் பெற்ற கயவராவர். இவரே உடையது விளம்பி உழலுபவரும் ஆவர். அசுத்த நிறை என்றால் என்னை? அதுதான் நிறையின்றி இருப்பது; விஷமம் என்னும் ஏற்றம் இறக்கம் அமைந்து இருப்பது. நிறையுடைமையே அமல நிறை எனப்படுவது என்க. அசுத்த நிறை உடையவரே கயவர் என்க.

### குறள்.

அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான்.

(ஷை 108-ம் அதி. கயமை செ. 6)

எனக் கயவர் நீர்மை வரையறுத்து உரைத்தார் நமது பொய்யில் புலவர். மறை பிறர்க்கு உய்த்து உரைப்பதன் காரணம் நிறை இன்மையே என்க.

## நாலடியார்.

"ஆற்றுந் துணையுமறிவினையுள்ளடக்கி
ஊக்கமுறையார் உணர்வுடையார்....."

என்னும் ஆன்றோர் வாக்கும் உடையது விளம்பா நிறையுடைமையையே நன்று வலியுறுத்துகின்றது.

ஒருவன் உடையது விளம்பாது விடுதல் — உள்ளது கூறாது விடுதல் வாய்மையைக் கைக்கொண்டு ஒழுகாக் குற்றத்தின் பாலதாமன்றோ எனின், தனக்கும் பிறர்க்கும் எவ்வாற்றானும் அவை தீமை பயப்பன ஆயினன்றே குற்றத்தின் பாற்படும் என்பது. மற்று, வாய்மை எனப்படுவது யாது? எனின், அதுதான் எவர்க்கும் எவ்வாற்றானும் தீமை பயவாத சொற்களைச் சொல்லுதலே என்று கூறப்படும். யாவர்க்கும் மிக்க நன்மை பயக்கும் இடத்துத் திரோதான முறை தழுவி இல்லன கூறுதல் குற்றமாகாது. மிக்க தீமை பயப்பனவாயின் உள்ளன கூறுதலும் குற்றமே ஆம் என்க. இது பற்றியன்றோ,

## குறள்.

வாய்மை எனப்படுவ தியாதெனின்
[யாதொன்றும்
தீமை யிலாத சொலல்.

எனவும்

பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரை
[தீர்ந்த
நன்மை பயக்கு மெனின்.

(ஷை 30-ம் ஆதி. வாய்மை செ, 2)

எனவும் பணித்தருளினர் நமது பொய்யில் புலவர் என்க. அறிஞர் பலர் எவ்வாற்றானும் பிறர்க்குத் தீமை பயவாதனவும் மிக்க நன்மை பயப்பனவுமாகிய பொய்ம்மையான சாட்டுக்களைத் திரோதானமாகக் கூறி அரிய பெரிய கருமங்களை ஊன்றியதும்— ஊன்றுவதும் ஈற்றில் அவை மிக்க நன்மையாய் முடிவதும் உலகியலிலும் உள்ளனவே ஆம். தந்தை தாயார் முதலிய குரவரும் பிறரும் தம் தம் சிறார்க்கும் சீடர்க்கும் அவர் மகிழத் தக்கவாறு பொய்ம்மையான சாட்டுக்கள் கூறி அவரை நன்னெறிக் கண் உய்ப்பதும் கண் கூடு. சீற்றத்தால் மிக்க வைரியாயினான் ஒருவன் மற்றொருவனைக் கொல்லப் புகுங்கால், அக்கொலைக்கு ஆட்பட நிற்பான் அச்சத்தால் ஓரிடத்து ஒளித்து இருந்துழி, அது கண்ட பிறன் ஒருவன் அவனைத் தான் கண்டிலன் எனப் பொய்ம்மை உரைத்து அக்கொலை பாதகம் ஊன்ற வந்தானை விலக்கினானாயின், அவன் கூற்றுப் பொய்ம்மை ஆகாது வாய்மையே ஆம். என்னை? அவன் கூற்று அக்கொலை பாதகத்தை விலக்கி அவ் இருவர்க்கும் மிக்க நன்மையையே அளிக்கின்றமையால் என்க. இவ்வாறு வாய்மை இடத்தவாய் வரும் பொய்ம்மை உரைகள் பல. வாய் + மை = வாயின் தன்மை—வாக்கைப் பற்றியது. உள் + மை=உள்ளத்தைப் பற்றியது. எவ்வாற்றானும் பிறர்க்கு நன்மை பயக்கும் வார்த்தைகளே வாயினால் கூறத் தகுவன — வாய்மை என அறிதற்பாற்று. மேலும் விரிப்பிற் பெருகும். இவ்வாற்றால் "உடையது விளம்பேல்" என்னும் ஒளவை திருவாக்கின் உலகியலுக்கு ஒப்பிய பொருள் ஒரு சிறிது கூறப்பட்டது.

இஃதே உண்மை நிலைக்கும் ஒக்கும். சற்குருநாதனாகிய எம் பெருமானும் தன்னை அடைந்த பக்குவ சீவர்களுக்கு வினைப் பயனை அநுபவிக்கச் செய்து இருவினை ஒப்பு மல பரிபாகம் வருவித்து அவரைப் புனிதராக்கு முகத்தால், அவர் அடையப் போகும் துன்பங்களை முதலிற் கூறாது, "அஞ்சேல்! திருவருட்கருணை விரைவில் வழங்கப்படும்" என்பது போல இனிய சாட்டுக்கள் பல கூறி, மதி வைராக்கியத்திற் குன்றாதவாறு, திரோதானமாய் நின்று, அவரை ஊக்கி வருவதும் உண்மையே ஆம். பின் வரும் பிரமாணங்களும் இவ் உண்மையை நன்று புலப்படுத்துவனவாகும்.

## திருவாசகம்.

காணுமாறு காணே னுன்னை யந்நாட் கண
[டேனும்
பாணேபேசி யென்றன்னைப் படுத்த
[தென்ன பரஞ்சோதி
ஆணோ பெண்ணோ யாரமுதே யத்தா
[செத்தே போயினேன்
ஏணில்லா நாயினே னென்கொண்
[டெழுகே னெம்மானே.

(ஷை திருச்சதகம்-ஆனந்தபரவசம் செ. 84)

அடியே னல்ல லெல்லாமுன் அகலவாண்
[டா யென்றிருந்தேன்
கொடியே ரிடையாள் கூறாவெங் கோவே
[யாவா வென்றருளிச்
செடிசே ருடலைச் சிதையாத தெத்துக்
[கெங்கள் சிவலோகா
உடையாய் கூவிப் பணிகொள்ளா தொறுத்
[தா லொன்றும் போதுமே.

(ஷை குழைத்தபத்து செ. 2)

ஒன்றும் போதா நாயேனை உய்யக்
[கொண்ட நின்கருணை
இன்றே இன்றிப் போய்ந்தோதான்
[ஏழைபங்கா எங்கோவே
குன்றே அனைய குற்றங்கள் குணமா மென்
[றே நீகொண்டால்
என்றான் கெட்ட திரங்கிடா யெண்
[டோண் முக்க ணெம்மானே."

(ஷை ஷை செ. 3)

"...........................
பெரியோ னொருவன் கண்டுகொளென் றுன்
பெய்கழ லடிகாட்டிப்
பிரியே னென்றென் றருளிய அருளும்
பொய்யோ எங்கள் பெருமானே."

(ஷை எண்ணப் பதிகம் செ. 2)

உண்மை நிலை கண்ட பெரியாரும் உடையதை—உண்மையை வெளிப்படையாக விளம்பினாரல்லர்; பக்குவிகள் உணர்ந்து உய்யும் பொருட்டும் உலக மாக்கள் நிலைமை நோக்கியும் கற்பனைகள் மூலமாகவே மறை பொருளாகக் கூறினர். உண்மையை உள்ளவாறு வெளிப்படையாக விளம்புதலால் உலக மாக்கள் பயனடையமாட்டார்; பக்குவக் குறைவால் விபரீதமாய் உணர்ந்து

கேடடைதல் கூடும். ஆதலால் உலகியல் நோக்கி திரோதானமாகவே— மறை பொருளாகவே யாவற்றையும் கூறினர் தத்துவப் பெரியார் என்க. எம்பெருமானும் உலகமாக்களுக்கு திரோதானமாயே நிற்கின்றான்; பொய்யர்க்கு அவர்கள் கர்மம் காரணமாக பொய்யனுயே நடிக்கின்றான். அவன் செயல் எல்லாம் ஈற்றில் நன்மை பயப்பனவாயே முடிகின்றன. திரோதானமாய் நிற்பதும் காருண்ணிய கிருதியே ஆம்.

"இமையளவுமுபகாரமல்லால்வேறொன்
றியக்காநிர்க்குணக்கடலாயிருந்தஒன்றே"

என்றனர் அறிஞர் பெருந்தகைபாகிய தாயுமானவர். (ஷை யார் பாடல் ஆகார புவனம் சிதம்பர ரகசியம் செ. 5) தத்துவப் பெரியாராகிய மெய்யடியார் நீர்மையும் இதுவே ஆம்.

'கண்டவர் விண்டிலர் விண்டவர் கண்டிலர்'

என்னும் பழமொழியும் உண்டு அல்லவா?

## முத்துத்தாண்டவர் பாடல்.

"கண்டவர்விண்டிலரே—அநுதினம்
[—விண்டவர்கண்டிலரே
கண்டவர்விண்டிலர்விண்டவர்கண்டிலர்
அண்டரண்டங்கடந்தாதிசோதிபாதம்."

(ஷை கீர்த்தனம் 16)

இவற்றின் பொருள் என்னை? உண்மையை மறை பொருளாகக் கூறிய தத்துவப் பெரியாரெல்லாம் உண்மையைக் காணுதவரா? எனின், சிறிது கூறுதும் :—

சிவன் முத்தி நிலை பூரணப்பட்ட ஆசிரியர் இலக்கணம் திருவாசகம் திருப்படை யாட்சியில் அழகாகக் கூறப்பட்டுள்ளது.

## திருவாசகம்.

"கண்கள் இரண்டும் அவன்கழல் கண்டு
[களிப்பன ஆகாதே."

(ஷை திருப்படையாட்சி செ. 1)

என்றனர் மணிவாசகர். ஒருவன் திருவடியைக் கண்டேன் எனப் புலம்புவானுயின், அவன் தன்னுள்ளே குரு தரிசனம் பெறவேண்டிய முறைப்படி — பூரணமாகப் பெற்றவனல்லன் என்று அப்பன் மாணிக்கம் ஆணை தந்து விட்டான் ;

"மீன்வலை வீசிய கானவன் வந்து வெளிப்
[படு மாயிடிலே."
"கண்கள் இரண்டும் அவன்கழல் கண்டு
[களிப்பன ஆகாதே."

என எத்துணை ஐயமும் இன்றி அருளிவிட்டான். இங்ஙனமாயின்,

## அப்பர் தேவாரம்.

"என்னுள்ளேதேடிக்கண்டுகொண்டேன்."

எனவும்,

"கண்டேன்அவர்திருப்பாதம்
கண்டறியாதனகண்டேன்".

எனவும்,

## திருவாசகம்.

"அணிகொள் தில்லைகண்டேன்."

எனவும்,

"காட்டினுய் கழுக்குன்றிலே"

எனவும் கூறப்பட்டது என்னையோ? எனின், இப்பாசுரங்கள் அருளப்பட்ட ஞான்று எமது அப்பன் மாணிக்கம் திருப்படையாட்சியில் கூறிய பக்குவம் — நிலை அடையப்படவில்லை என்பதே உண்மையாகும். எனினும் அன்னார் பிற்றை ஞான்று அத்தகைய நிலையை அடையப் பெற்றார் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை. தம்முள்ளே குரு தரிசனம் பெறும் வகையில் படித்தரம் உண்டு. மணிவாசகர் தம்முள்ளே குருதரிசனம் அடையப்பெற்றபோது தான் கழுக்குன்றப் பதிகத்தை அருளிச் செய்தனர் என ஆம். பின்பு அப்பெற்றி பூரணப்பட்டு அவ் ஆசான் தானே ஆனபோது—ஆன அவசரத்தில் அச்சோப் பதிகத்தை அருளிச் செய்தனர் எனவும் ஆம். அப்பால் பூரண மௌனமே உளதாகும்; உடையது விளம்புதல் கைகூடமாட்டாது; வையகத்தில் மாந்தர் முன்பு வாய்திறப்பது இல்லை என்க. பின்வரும் வேத வாக்கு இவ்வுண்மையை நன்று வலியுறுத்துதல் கண்டு கொள்க.

## சிவவாக்கியர் பாடல்.

ஐயன்வந்துமெய்யகம்புகுந்தவாற
[தெங்ஙனே
செய்யதெங்கிளங்குரும்பைநீர்புகுந்த
[வண்ணமே
ஐயன்வந்துமெய்யகம்புகுந்து கோயில்
[கொண்டபின்
வையகத்தில்மாந்தர்முன்புவாய்திறப்
[பதில்லையே.

(ஷை செ. 161.)

இப்பெற்றி கைகூடிய பின் உடையது விளம்புதல்— பாசுரங்கள் எழுதுதல் கைகூடமாட்டா என்க. பூரண மௌனமே—வாய்மையான மௌனமே உளதாகும் என்பது வேத உண்மை. இவ்வாற்ருல் உடையது விளம்பேல் என்பது உடன் பாட்டானும் எதிர் மறையானும் உண்மை நிலைக்கு ஒப்பிய பொருளை உடையதாதல் கண்டு கொள்க. மணிவாசகன் அருளிய திருப்படையாட்சித் திருப்பதிகத்துக்குப் பொருள் விரிப்பான் ஆசைப் படுபவன் —முயல்பவன் உண்மைப் பொருள் காணும் ஆற்றலுடையவன் தற்கால மாக்களுள் ஒருவனும் இல்லை என்பது மிகை யன்று. அப்பதிகப் பொருளை திருவருட் சகாயத்தால் கண்டு தெளிவார்க்கே சிவன் முத்தர் இலக்கணம் வெட்ட வெளிச்சமாகும். அஞ்ஞான்று போலி நிட்டை முதலியவற்றையே உண்மை என மயங்கும் போலிக் கொள்கைகள் எல்லாம் நீறிப் போகும் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை.

அமல முதற்படி கண்ட—இருவினை ஒப்பு மலபரிபாகம் வாய்ந்த—மாற்றிப் பிறந்த மெய்யடியாரெல்லாம் உலகர் போல் வாழ்ந்து ஒப்புர ஒழுகுபவரேயன்றி வேடங்களாற்ருன் — நிட்டை

(8-ம் பக்கம் காண்க.)

# உண்மை முத்திநிலை ஆராய்ச்சி மறுப்பு.

"வித்தக"ப் பத்திராசிரியர் எழுதியது.

(தொகுதி 2. 21-ம் வாரத் தொடர்ச்சி.)

### சுத்தசாதகம்.

ஆகமமிருபத்தெட்டினின்முடிபாம்
ஆகமம்வாதுளமதனில்
ஏகமென்றியம்புமறைஅநுசரித்தே
இயம்பிநோன்மறையவையில்
பாகமதுறுஞ்சாமத்தின்முன்னெறியும்
பகர்சிவாத்துவிதவந்நெறியும்
ஊகமதிலங்கவியம்பிமெதனல்
உண்மைசாமத்தினின்முடிவே.

(ஷை செ. 6.)

[சாந்தோக்கியம் சாம வேத உபநிடதம் என்ப. சந்தோகர் சாம வேதிகள் எனப்படுவர். மேலே காட்டிய சாம வேத உபநிடதமாகிய சாந்தோக்கியத்தில் தூல சூக்குமங்களின் அந்நியோந்நிய சம்பந்தம் அநுபவமுறையான திருஷ்டாந்த பூர்வமாக இனிது விளக்கி நிறுவப்பட்டமை அச் சாமவேதத்து "அசி" பதப் பொருளால் உணர்த்தப்படும் சிவாத்வைதம் என்னும் அங்கலிங்க ஐக்கியமாகிய அமல மார்க்க உண்மைக்கு உறுசான்றுதல் கண்டு கொள்க.]

### சித்தாந்த சிகாமணி.

மானமின்றியேசிவத்தினில்வைத்தவிந்தியத்தோன்
ஊனமொன்றியமூப்பொடுஉயிர்விடுமரணப்
தானுணும்பசிதாகமென்றிவற்றினைச்சாரான்
வானமொன்றெரும்பற்றிலாவாறெனமன்னே.

(ஷை இந்திரியாநுக்கிரகத்தலம் செ. 4.)

[மானம்—தற்சுதந்திரம். ஊனம்—ஊனோடு தொடர்புடையது. "ஊனங்கள் எட்டும் ஒழித்தொன்றுவோர்கட்கே" எனத் திருமந்திரம் (8-ம் தந். நின்மலாவத்தை செ. 17) கூறியதும் அறிக. "உயிர் விடு மரணம்...... சாரான்" என்பதனால் சீவன் முத்தன் உடலைவிட்டு உயிர் பிரியாது அவ் உடலோடு ஒழிவற ஒன்றி நிற்றலும் தூல சூக்குமங்களின் அந்நியோந்நிய சம்பந்தமும் நன்று புலப்படுதல் கண்டு கொள்க. ஆகமாந்தமாகிய சித்தாந்த சிகாமணி என்னும் இந் நூல் சமஸ்கிருத பாஷையில் இரேணுக கணநாதர் என்பவரால் அருளிச் செய்யப்பட்டது. தத்துவப் பெரியாராகிய இவர் சோமேச சந்நிதானத்தில் உடலோடு மறைந்தனர் என்ப. சிறந்த செந்தமிழ்ச் செய்யுளாக இந் நூலை மொழி பெயர்த்தவர் புலவர் பெருமானாகிய துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள். ஆகமாந்தமாகிய சிவாத்வைதமே வீரசைவம் சுத்தாத்துவித சைவ சித்தாந்தம் சிவ சித்தாந்தம் முதலிய பல திருநாமங்களால் வழங்கப்பட்டதாகும். இதுவே அநாதியாய் உள்ளது. "தத்துவமசி" வாக்கியப் பொருள் அங்கலிங்க ஐக்கியமே என்பது பின் வரும் வாதுளாகம சுலோகத்தாலும் நன்று வலியுறுகின்றது.

### வாதுளாகமம் அநுபவ சூத்திரம்.

"சிவஏவஸ்வயம்லிங்கமாத்மைவாங்கம்பவேத்கலு|
தயோ: சிவாத்மனோ: ஸம்யக்யோக ஸம்யோகஏவஹி||
லிங்கம் தத்பதமாக்யாநம்அங்கம்த்வம்பதம் ஈரிதம்|
ஸம்யோகோ-ஸிபதம்ப்ரோக்தம்அந்யோரங்கலிங்கயோ:||

தத்— சிவம், லிங்கம்,—துவம்—நீ, அங்கம் (உடலுயிர்) சீவன். அசி — ஆகின்றாய், ஐக்கியம். அங்க லிங்க ஐக்கியமே சாமவேதத்து "அஸி" பதப்பொருளாகிய உண்மைச் சைவ முத்திநிலையாகும்.]

பின் வரும் வாதுளாகம சுலோகம் சிவாத்வைதமே இரகசியமானது எனவும் அடைதற்கு மிக அரியது எனவும் மஹாதந்திரம் எனவும் மறை பொருளுள்ளும் மறை பொருள் எனவும் சகல சாஸ்திரங்களுக்கும் மேலானது எனவும் அதி சூட்சுமமானது எனவும் பெரும் பேறாகிய மிக்க உந்நத நிலையை (முத்தி) அளிப்பது எனவும் வேதாகமத் தெளிவாகிய சாரத்துள்ளும் சாரமாயுள்ளது எனவும் பசுமரத்தாணிபோல நன்று வலியுறுத்தி நிலை நாட்டுதலைக் கண்டு தெளிக.

### வாதுளாகமம்.

அப்ரகாசிய மிதம்தந்த்ரம் ரஹஸ்ய மதிதுர்லபம்
சிவஜ்ஞானம் மஹாதந்த்ரம் ஸம்க்ஷேபாத் வக்ஷியதேமயா !

குஹ்யாத் குஹ்யமிதம் தந்த்ரம் ஸர்வசாஸ்த்ர ஸமுச்சரயம்
ஸூக்ஷ்மாத் ஸூக்ஷ்மதரம் ஸாரம் ஸாரத் ஸாரம் மஹோதயம்!!

இவற்றால் வேதாகம முடிபாய் உள்ளது சிவாத்வைத சைவ சித்தாந்தமே என்பது வெள்ளிடை மலையாம்.

தத்துவமசி மஹா வாக்கியப் பொருள் அங்கலிங்க ஐக்கியம் என்பதே வேதாகம முடிபாதலால் தூல சூக்குமங்கள் அந்நியோந்நிய சம்பந்தம் உடையன என்பதில் எட்டுணையும் ஐயமில்லை. உடலுயிரே அங்கம் எனப்படுவது— ஜீவ சப்தத்தால் கிளக்கப்படுவது என்க. அமல முதற் படி கண்டு வாய்மையான அட்டமா சித்தி வாய்க்கப் பெற்ற மெய்யடியார் சூக்குமத்தோடு வதிதலும் பரகாயப் பிரவேசம் முதலிய சித்திகள் உஞற்றுவதும் உண்டு. இடை நட்பாளராகிய — பிரளயாகலராகிய இவர் தமது விமல தநுவாகிய குடம்பை யினின்றும் வெளியேறுவர்; பின் உட்புகுவர்; இறந்தோரை எழுப்புதல் முதலிய அரிய பெரிய சித்திகளை உஞற்றுவர்; ஏக காலத்தில் பல இடங்களில் இருந்து விவகரிப்பர். ("வித்தகம்" தொகுதி 1 இல. 24 இல். உடலுயிர்ச் சம்பந்தம் என்னும் கட்டுரையை நோக்குக.) இவர் சூக்குமத்தோடு வெளியேறும் ஆற்றல் உளராயினும் முத்தியடையுங்கால் தமது விமலமான தூலத்துட் புகுந்து அதனை அமலமாக்கி அதனோடு மறைந்தே முத்தியடைய வேண்டியராவர். இதனால் தூல சூக்கும சம்பந்தங்கட்கு ஆவதோர் இழுக்கில்லை. விமலம் பெறாத அசுத்த தநுவுடைய சீவர்களது உயிரானது அவர் உடலை விட்டுப் பிரியுமாயின், பிறிதோர் யோனிவாய்ப்பட்டுப் பிறப்பதேயன்றி, மீள அவ் வுடலுள் புகமாட்டாது; மரணம் அடைந்த அன்னார் விமலம் பெறாத—அசுத்தமான சூக்குமம் தூலத்தோடு அழிந்து ஒழிந்தமையால் என்க.

மரணம் அடைந்தோர் உயிர் சூக்குமத்தோடு பிரிந்து வேறாக நிற்குமே எனவும், அசுத்தமான அச் சூக்குமத்தினின்றே பூத சாரசரீரம் யாதனா சரீரம் என்பன அந்தரத்தில் தோன்றும்எனவும், உயிரானது அவ்வுடம்புகளோடு சுவர்க்க நரக உலங்களுக்குச் சென்று போகம் துய்க்கும் எனவும் சாத்திர நிபுணர் கூறுகின்றனர். இக் கூற்று மேலே காட்டிய வேதப்பிரமாணங்களுக்கு முற்றாக முரண்படுகின்றது. பூதசாரசரீரம் என்றால் தேவ சரீரம் என்கின்றனர். தேவ சரீரம் என்றால் என்னை? சிவலோக வாழ்விற்குரிய தேவ சரீரம் எது? அது அசுத்தமான சூக்குமத்தினின்றும் ஆக்கமுறுவதாகுமா? அசுத்தமான தூலம் நாளடைவில் அணு அணுவாகக் கெட்டு அழியுங்கால்—மரணம் நேருங்கால் அதனோடு அந்நியோந்நிய சம்பந்தமுடைய சூக்குமமும் ஏக காலத்தில் கேடடைந்து அழிவதேயன்றி, கேடடைந்த அத்தூலத்தினின்றும் சூக்குமம் பிரிந்து வேறாக நிற்றலும் அதிலிருந்து தேவ சரீரம் அந்தரத்தில் ஆக்க முறுதலும் இயற்கை விரோதமே யாகும்—அசம்பாவிதமேயாகும். பின் வரும் பிரபல சுருதிகள் காய மாயம் கழியப் பெற்றவர்க்கே—மாற்றிப் பிறந்தவர்க்கே சிவலோக வாழ்வு கைகூடும் என்பதனை நன்று வற்புறுத்துதல் கண்டு கொள்க.

## திருவாசகம்.

செடியா ராக்கைத் திறமற வீசிச் சிவபுர நகர்புக்குக்
கடியார் சோதி கண்டு கொண்டென் கண்ணிணை களிகூரப்
படிதா னில்லாப் பரம்பர னேயுன் பழவடி யார்கூட்டம்
அடியேன் காண ஆசைப் பட்டேன் கண்டா யம்மானே.

(ஷை ஆசைப்பத்து செ. 9)

அடியா ரானீ ரெல்லீரு மகல விடுமின் விளையாட்டைக்
கடிசே ரடியேவந்தடைந்து கடைக்கொண் டிருமின் திருக்[குறிப்பைச்
செடிசே ருடலைச் செலநீக்கிச் சிவலோ கத்தேநமைவைப்பான்
பொடிசேர் மேனிப் புயங்கன்றன் பூவார் கழற்கே புகவிடுமே.

(ஷை யாத்திரைப்பத்து செ. 4)

## திருமந்திரம்.

"சித்தர்சிவலோகம்இங்கேதெரிசித்தோர்"

என்னும் சுருதியின் பொருளும் இதுவேயாம் "இங்கே" என்பதனால் சிவலோக வாழ்வு இறந்தபின் அடையமுடியாத தென்பது நன்று வலியுறுகின்றது. பின்வரும் பிரபல சுருதிகளும் இவ் உண்மையை நன்று வலியுறுத்துதல் கண்டு கொள்க.

## அப்பர் தேவாரம்.

பிரப்புமூப்புப்பெரும்பசிவான்பிணி
இறப்புநீங்கிஇங்குஇன்பம்வந்தெய்திடும்
சிறப்பர்சேறையுட்செந்நெறியான்கழல்
மறப்பதின்றிமனத்தினுள்வைக்கவே.

(ஷை திருச்சேறை—திருக்குறுந்தொகை செ. 3)

["இறப்பு நீங்கி இங்கு இன்பம் வந்து எய்திடும்" என்பது சிவலோக வாழ்விற்குரிய பேரின்பம் அமலமடைந்த உடலோடு அநுபவிக்கப்படுதலை உணர்த்தி நின்றது.

## சுந்தரர் தேவாரம்.

மண்ணுலகிற்பிறந்துநும்மைவாழ்த்தும்வழியடியார்
பொன்னுலகம்பெறுதல்தொண்டனேன்இன்றுகண்டொழிந்[தேன்
விண்ணுலகத்தவர்கள்விரும்பவெள்ளையானையின்மேல்
என்னுடல்காட்டுவித்தான்நொடித்தான்மலைஉத்தமனே.

(ஷை திருநொடித்தான்மலை செ. 5.)

வாய்மையான சாதக யோகங்களால் அமல முதற்படி கண்டு படியேற்றம் பெறும் மெய்யடியாரே பொன்னுலக வாசிகளாகிய தேவர் என்பதும், அவர் விமல தநுவே தேவ சரீரம் என்பதும், தன்னிலையும் விமல மடையுமாதலால் அசுத்தமான இம்மாயாப் பிரபஞ்சமே அவர் தமக்குப் பொன்னுலகமாக மாற்றமடையும் என்பதும்

வேத உண்மையேயாதல் "தொண்டனேன் இங்கு கண்டொழிந்தேன்" என மெய்த் தொண்டராகிய தமக்கு இவ் அரிய பெரிய நிலை கைகூடப்பெற்ற அநுபவ முகத்தால் சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச் செய்தவாற்றானும் வெள்ளிடையாகின்றது. விண்ணுலகத்தவர்கள் — இமையா நாட்டமுடைய அடியார் கூட்டம். "வெள்ளை யானை" என்பது அழுக்கு நீங்கிய — விமலமடைந்த வாசியை — தூய உள்ளத்தை உணர்த்தி நின்றது. வாசியாகிய மனம் வெல்லப்படுவதே — அடக்கப்படுவதே யானைமேல் ஏறியதென்பது. மனம் வசப்படவே பொறி புலன்களும் வசப்பட்டன ஆகும். மனம் மதியோடு ஒன்றித் தூய்மையடையவே உடல் அமல மடைந்து சிவ வடிவாகும். "மாசற்ற கொள்கை மனத்தில் அடைந்தக்கால், ஈசனைக் காட்டும் உடம்பு" என்பது ஔவை குறள். (உடம்பின்பயன் செ. 6.) மனம் பொறி என்பனவே யானை என்னும் பரிபாஷையால் பெரியோரால் பேசப்பட்டன. "கடந்தாய் தடந்தாள் அடற்கரியே" என்பது திருவாசகம். (நீத்தல் விண்ணப்பம் செ. 31) "ஆனைகள் ஐந்தும் அடக்கி" என்பது திருமந்திரம் (8-ம் தந். நின்மலாவத்தை செ. 13) மாற்றிப் பிறந்த மெய்யடியார்க்கு —வழியடியார்க்கு அவர் மனமாகிய காட்டானை வெள்ளை யானையாக மாற்றமடையும். இதுதான் "ஞானவாரணம்" எனப்படுவது. காட்டானை வெள்ளை யானையானது என்னும் கர்பனையின் உண்மையும் இதுவே யாம். வெள்ளை யானை வழியடியானாகிய இந்திரனுக்கு உரியது என்பர். இத்தகைய வெள்ளை யானையாகிய ஞான வாரணத்தின் ஆற்றல் அளவிடற்கு அரியது. இது பற்றியே இது "சிரமலி யானை" (சுந்தரர் தேவாரம்) எனப்பட்டது. சிரம் அளப்பில் ஆற்றலைக் குறித்தது. அயிராவணம் இரண்டாயிரம் கொம்புள்ளது என்பதும் ஞானவாரணத்தின் அளப்பில் ஆற்றலையே குறிப்பதாகும். விரிப்பிற் பெருகும். சிவ பெருமான் பொன் வண்ணர் என்பது சுருதி.

## தைத்திரீய ஆரணியம்.

"நமோஹிரண்யபாஹவேஹிரண்யவர்ணாய
ஹிரண்யரூபாயஹிரண்யநாதயேநமோநம :

பொற்கையினர்க்கு பொன்வண்ணர்க்கு பொன்வடிவினர்க்கு பொற்பதிக்கு நமஸ்காரம் நமஸ்காரம் என்பது இதன் பொருளாகும்.

"உருத்திரர்சூரியனைஒத்தஒளியினராய்ப்
பொற்பிரகாசத்தினராய்உள்ளார்"

என "ருக்" வேதம் கூறுகின்றது என்ப.

## திருவாசகம்.

பன்னாட் பரவிப் பணிசெய்யப் பாதமலர்
என்னாகந் துன்னவைத்த பெரியோன் எழிற்சுடராய்க்
கன்னா ருரித்தென்னை யாண்டுகொண்டான் கழலிணைகள்
பொன்னான வாபாடிப் பூவல்லி கொய்யாமோ.

(ஷை திருப்பூவல்லி செ. 9)

## சுந்தரர் தேவாரம்.

"பொன்னார் மேனியனே......................."

(ஷை திருமழபாடி)

## அப்பர் தேவாரம்.

"..................................................
கூற்றைநீக்கிக் குறைவறுத்தாள்வதோர்
மாற்றிலாச் செய்பொன்னவர் மாற்பேறரே."

(ஷை திருமாற்பேறு. திருக்குறுந்தொகை செ. 5.)

## சேரமான் பெருமாள்.

பொன்வண்ண மெவ்வண்ணமவ் வண்ணமேனி பொலிந்திலங்கு
மின்வண்ணமெவ் வண்ணமவ் வண்ணம் வீழ்சடைவெள்ளிக் [குன்றம்
தன்வண்ணமெவ் வண்ணமால் விடைதன்னைக்கண்ட
என்வண்ணமெவ் வண்ணமவ் வண்ணமாகிய ஈசனுக்கே.

(ஷை பொன்வண்ணத்தந்தாதி)

இவற்றால் மெய்யடியார்க்குரிய பொன்னுலகம் என்பது சிவலோகத்தையே நுதலியது என்பதும் அமலமுதற்படிகண்ட மெய்யடியார்க்குத் தன்னிலையாவும் பொன்மயமாகவே அமையும் என்பதும் நன்று புலப்படும். விமல தேகமே பொன் தேகம் எனப்படுவது; மாடு தேகம் என்னும் ரக்ஷக தேகம் எனப்படுவது. மாடு என்றால் பொன் என்பர். இதுவே "மால்விடை" எனப்படும் இடபதேகமாகும். இதுபற்றியே,

"..........மால்விடைதன்னைக்கண்ட
என்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணமாகிய ஈசனுக்கே."

என அருளிச் செய்தார் சேரமான் பெருமாள் என அறிதற்பாற்று.

"மாற்றிலாச்செம்பொன்ஆவர்மாற்பேறரே"

என அப்பர் அருளியதும் அறிக.

## கருவூரார் திருவிசைப்பா.

"...........சிவபதம் என்னும்
பொன்னெடுங்குன்றுடையோரே."

(ஷை திருச்சாட்டியக்குடி செ. 11)

என்பதனாலும் சிவபதம்—சிவலோகம் பொன்மயமானது — பொன்னுலகம் என்பது வெள்ளிடையாம். தத்துவப் பெரியார் துணிபும் வேதவுண்மையும் இவ்வாறாக, உல

## மதிப்புரை

சுன்னாகம் வித்துவ சிரோமணி ஸ்ரீலஸ்ரீ. அ. குமாரசுவாமிப் புலவர் அவர்கள் மாணவருள் ஒருவரும், ஆவினிப்பட்டி "விவேகானந்தர் கல்விக் கழக"த்து ஆசிரியருமாகிய ப்ரம்ஹ ஸ்ரீ. பண்டித. வ. மு. இரத்தினேசுவர ஐயர் அவர்களால் இயற்றப்பட்ட "வசன இரத்தினமிர்தம்" என்னும் சுவடி ஒன்று வரப்பெற்றுப் படித்து மகிழ்ந்தேம். செவ்விய நடையில் எழுதப்பட்ட "கடவுள்", "அன்பு", "அறம்", "கல்வி" என்னும் கட்டுரைகள் இச்சுவடியில் மிளிர்கின்றன. பிரசங்கம் புரிதலினும் உரை நடையினும் வல்லுநரும், தென்னிந்தியாவில் உள்ள தமிழ்ப் புலவர் பலரோடு நன்று பழகி அவர்தம் மதிப்புரைகள் பெற்றவருமாகிய எமது ஐயரவர்கள் மேலும் இதுபோன்ற கட்டுரைச் சுவடிகள் பல உஞற்றித் தமிழ் வாணரை மகிழ்விக்கும்படி திருவருளைப் போற்றுகின்றேம். பிரதி அனுப்பிய ஐயர் அவர்களுக்கு எமது வந்தனம் உரியதாகுக.

[ப-ர்]

## திருவாசக உண்மை.

தென்கோவை தமிழ்ப்பண்டிதர்
ஸ்ரீமான், ச. கந்தையபிள்ளை
(வித்தகம் பேராசிரியர்)
அவர்களால் எழுதப்பட்டது.

கடவுள் தமது அருமைத் திருக்கரத்தால் எழுதி அகில சீவர்கள் உய்யும் பொருட்டு உதவி யருளியதும், மாணிக்கவாசகர் அருளிச் செய்ததும் தெய்வத் தமிழ் வேதமுமாகிய திருவாசகத்தின் உண்மைக் கருத்துக்களை நன்கு விளக்கி வசன நடையில் எழுதப்பட்டது.

வேண்டுவோர் 0-2-9 அணா தபால் முத்திரை அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம்.

நந்தி வெளியீட்டு மன்றம்
புதுவை.

(4-ம் பக்கம் தொடர்ச்சி)

களாற்றான் பிறவாறுதான் தமது நிலைமையை உலகமாக்களுக்குப் புலப்படுமாறு தெரிவிக்கமாட்டார். அவர் தம் திருநூல்களையுடைய மறைகளும் "உடையது விளம்பேல்" என்பதன் எதிர்மறைப் பொருளுக்கும் ஒத்தனவாயே அமைந்துள்ளன என்பதும் மிகையன்று. மேலும் விரிப்பிற் பெருகும்.

இது காறும் கூறியவைகளால் "உடையது விளம்பேல்" என்னும் ஒளவையார் அமுத வாக்கு உலகியலுக்கும் உண்மை நிலைக்கும் ஒப்பிய பொருளை உடையதாதல் ஒருவாறு உணரத்தகும்.

சுபம்!

## அறிவிப்பு

சடிதர்களின்
அபிப்பிராயங்களுக்கு
அவர்களே பொறுப்பாளிகள்.

---

கோர் தேவ உலகம் எனவும் நரக உலகமெனவும் வேறு வேறாகக் கருதுவனயாவை? புத்தேளுலகு என்றால் தேவருலகம் என்கின்றனரர். "புத்" என்றால் அசுர உலகம் ஆகாதோ? தேவ உலகம் எது? அசுர உலகம் எது? உலகம் விபரீதத்தில் ஆழ்ந்து கிடக்கின்றது. இந்த விபரீதத்திற்றான் உண்மை காண வேண்டும். வியாபகமாகிய இம்மாயாப் பிரபஞ்சமே "புத்" என்றால் பொருந்தாதோ? இப்புத்தினின்றும் வெளியேற வேண்டாவோ? வெளியேறினலன்றோ புத்திரப் பேறு கிடைத்ததென்று கூறலாம்; ஞானக் குழந்தை பிறந்ததென்று கூறலாம்.

### திருவாசகம்.

"நின்மலரடிக்கே கூவிவோய் கும்பிக்கே யிவோய்"
(ஷ அடைக்கலப்பத்து செ. 8.)

என்னும் திருவாக்கில் "கும்பி" என்பது யாது? சாண் கும்பி என்பார் கருத்தென்னை? பிறப்பும் இறப்பும் நகரமெனப் படாவோ? மரண வேதனை யம வேதனை அல்லவா?

### திருவாசகம்.

"நரகொடுசுவர்க்கநானிலம்புகாமல்
பரகதிபாண்டியற்கருளினைபோற்றி."

என்னும் திருவாக்கின் பொருள் என்னை? தன்னிலை விமலமடையப் பெற்ற மெய்யடியார்க்கு முன்னிலையும் அவ்வாறே விமல வடிவாகும்—பொன்னுலகமாகும். அல்லாத உலகமாக்களுக்கு முன்னிலையாவும் அசுர உலகமே ஆகும். இயற்கை முறை இதுவே ஆம். அன்றி, தூலம் பிணமானபின் உயிர் சூக்குமத்தோடு பிரிந்து தேவருலகம் அடையும் என்பது—பொன்னுலகம் புகும் என்பது வேத விரோதமான பொருந்தாக் கொள்கையே யாகும். தூல சூக்குமங்கள் அந்நியோந்நிய சம்பந்தம் உடையன என்பதே தத்துவப் பெரியார் துணிபும் வேத உண்மையும் ஆம் என்பது மேலே கூறியவைகளால் வெள்ளிடை மலையாம். தூலம் வேறு சூக்குமம் வேறு என்னும் இயற்கை விரோதமான கொள்கையே உண்மைச் சைவ முத்திநிலை மறை பொருளாயினமைக்கு முக்கிய காரணமாயிற்று. மேலும் விரிப்பிற் பெருகும்.

(தொடரும்)